இந்நூல்...

சைவசமய உலகில் சமயகுரவர்கள் என்றும் நால்வர் என்றும் போற்றப்படுபவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக் கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோராவர். இந்த நால் வரின் சிறப்பு, இறைத்தொண்டு, இறையனுபவம் போன்ற வற்றை நால்வர் நான்மணிமாலை என்னும் சிற்றிலக்கியம் பாடுகிறது.

இந்த நூலினைப் 'பெரிய புராணச் சுருக்கம்' என்றும் கூறுவர். கற்பனைக் களஞ்சியம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் இந்த நூலின் ஆசிரியர்.

இந்த நூலில் 40 பாடல்கள் அமைந்துள்ளன. நால்வரில் ஒவ்வொருவரின் சிறப்புக் குறித்தும் 10 பாடல்கள் பேசுகின்றன. இந்த நூலுக்குப் பல உரைகள் எழுந்துள்ளன. இதனினின்றும் இந்நூலின் சிறப்பை உணரலாம்.

இந்த உரையாசிரியர்கள் மூல நூலின் கருத்துக்களை விளக்குமிடத்துத் தங்களுடைய புலமைத் திறத்தையும் வெளிப் படுத்தியுள்ளனர். அவர்களது புலமைத்திறம் உரை கூறும் போக்கில் ஒன்றுபட்டும், வேறுபட்டும் விளங்குகிறது. அது குறித்த ஆராய்ச்சியின் விளைவே இந்நூல். இது சென்னைப் பல்கலைக்கழக எம்.பில் பட்ட ஆய்வேட்டின் நூல் வடிவ மாகும்.

திருமலை திருப்பதி தேவஸ்தானம் அளிக்கும் சமய நூல் களுக்கான நிதியுதவின் கீழ் இது நூலாக்கம் பெற்றுள்ளது.